Allur.

3 யொம் கொசிகன் அரங்க ஞானக்காவனும் அரங்கன் திருமெற்றளியும்
4 [சி]வகொசரி ஊர னறிஞ்சிகைஉம் கமுதுவன் விடமங் கற்க்கடைஉம் இவ்வனை-
5 [வொ]ம் அல்லூர்உடையான் அறிஞ்சிகை [ப]ாண்டன்இடைக் கொண்ட பொன் கூ-ப அறு-
6 க[ழ]ஞ்சும் எங்களில் கொண்ட பரிசாவது[।*] அரங்க ஞானக்காவன் கொண்ட பொன்
7 [மு]க்கழஞ்சும் அரங்கன் திருமெற்றளி கழஞ்சரைஉம் ஊர னறிஞ்சிகை அரைச்ச-
8 [ழஞ்]சும் விடமங் கற்கடை கழஞ்சும் ஆகப பொன் அறுகழஞ்சும் கொண்டு
9 [இ]ப்பொன்னுக்கு பலிசைஊட்டாக காவிரியில்னின்று தூணிகொள்ளிக் குடத்தா-
10 [ல் தி]ருமஞ்சுணனீர் காள மூதிக்கொண்டு மூன்று சன்திக்கும் னியதி முக்குடம் திரு[ம]-
11 ஞ்சுண(ன்)நீர் குணந்து சந்தி வழுவா(ம்)மெய் மூன்று சந்தி(உ)யும்
12 குணந் தட்டுவதாகவும்[।*] ஒரு சந்தி முட்டில் முட்டிரட்டி அட்டுவதாகவும் [।*]
13 ஒரு முழுநாள் முட்டில் நியதி மஞ்சாடிப் பொன் த[ண்]டமும் இறுத்து
14 இப்பரிசு முட்டாமல் அட்டுவதாகவும்[।*] இப்பரிசு இசைஞ்சு இ[ப்*]பெ[ா]-
15 ன் கொண்டு திருமஞ்சுணநீர் இப்பரிசு முற்ப்பட்டொமெய்
16 சந்திராதித்தவல் அட்டுவொ(ம்)மானொம் இவ்வனைவெ[ா]-
17 ம் [।*] இது பன்மாஹெஸ்வர ரக்ஷை[க்ஷ]||—

## No. 698.

(*A.R. No.* 384 *of* 1903).

ON THE SAME WALL.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] மதிரையு மீழமுங் கொண்ட கொ-
2 ப்பரகெசரிபன்மற்கு யாண்டு சய-ஆவது உறையூர்க்கூ-
3 ற்றத்து அல்லூர் அல்லூர் நக்கர் கொயிற் பரமெ-
4 ஸ்வரர்க்கு அல்லூர்உடையான் அறிஞ்சிகை பாண்டன்
5 குடுத்த ஊர்க்கல்லாற் றுளைப்பொன் ய௱ பதின்கழைஞ்சு-
6 ம் இவநெய் அல்லூர் ஊராரிடை புன்செய்த்திடலை சந்திரா-
7 தித்தவற் இறைகாவலாகக் கொண்டு வயக்கி நிர்நில-
8 மாக்கி குடுத்த நிலத்துக் கெல்லையும் இதன் மண்ணிலை[க்-
9 கு] அகப்பட்ட [கிழ்]பாற்கெல்லை நந்தவானத்துக்கு மெ[ர்*]க்குந் தென்-
10 பாற்கெல்லை முங்கிற்காற்செய்க்கு வடக்கும் மெல்பாற்கெல்லை கடை-
11 ய்வாய்க்காலுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை மணற்காற்செய்க்கு[ம் இ]-
12 [த]ன்மெலை இரண்டுமாவிற்கு தெற்கும் இவ்விசைத்த பெ-
13 ருநான்கெல்லைஇல் அகப்பட்ட நிர்நிலன் ச அரைமாவும் இ-
14 தன் மிய்து பொய் இத்தெவர் புன்செய்த்திடல் சிறுக்கள-
15 ஞ்செரி திடலில் இத்தெவரிடையெய் விலைகொண்டு வயக்கி
16 நிர்நிலமாக்கிக் குடுத்த நிலத்துக் கெல்லை கிழ்பாற்க்கெல்லை இ-
17 த்தெவர் புன்செய்த்திடலுக்கு மெ[ர்*]க்குந் தென்பாற்கெல்லை இத்தெ-
18 வர் நிலத்துக்கு வடக்கும் மெல்பாற்கெல்லை அல்லூர் எட்டி-
19 களும் அல்லூர் நட்டியத்தார்க ணிலத்துக்கு மற்றுமொழி-
20 ந்த நிலத்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை அல்லூர் பேயு-
21 ஸந் நானூற்றுவந் தெற்றி செய்க்கு தெற்கும் இவ்விசைத்த
22 பெருநான்கெல்லைஉ ளகப்பட்ட நிலன் [உப] இவ்விரண்டுமா
23 வும் ஆக இவ்விரண்டு கிடக்கை நிலநுமாய் ஹு அரைக்காலும்
24 இப்பொன் யமம் இவ்வூர்ப் பட்டுடையார் கொஸிகந் அரங்க ஞ-
25 ானக்காவனும் அரங்கந் திருமெற்றளியும் கமுதுவன் விடமங் க-
26 ற்கடையும் சிவகொசரி ஊரன் அறிஞசிகையும இஞ்ஞால்வொம் இ-
27 ப்பொந் யம எங்கள் பங்கின்வசமெய் ஒப்[பு]கொண்டு இப்பெ-
28 ான்நுக்குப் பொலியூட்டாகவும் இந்நிலம் ஹு நாங்களெ கொ-
29 ண்டு இத்தெவர்க்கு சிறுகாலைசந்திஇல் மூன்-
30 று விளக்கு க சாமமெரிவதாகவும் உச்சம்பொதுச-
31 ந்தியில் அறுநாழிகை எரிவதாகவும் அந்தியம் பொ-
32 து சந்திஇல் க-சாம மெரிவதாகவும் இப்பரிசு சஜ ராதித்தவ-
33 ற் எரிப்பதாகவும்[।*]ஆடிஅருள நெய் சூலநாழியால் உ௨ திரு[வ]-
34 முதரிசி பத்தெட்டுக்குத்தல் நுவ நெயமுது ஒருபிடியும் மஞசட்காப்-
35 பு அரைப்பலமும் கறியமுதுக்கு நெல் உரி தயிரமுது உரி அடைக்-

36 காயமுது ௫ சங்கராந்திதொறும் சந்திராதித்தவற் இப்ப-
37 டி செலுத்துவொமானொ மிவ்வனைவொம்[।*]
38 இப்பரிசு நிசதிப்படி சிறுகாலைசந்தியில் திருக்கா-
39 ப்பு திறந்தது முதல மூன்று விளக்கு ஒரு சாம மெரிப்பதாக-
40 வும் உச்சம்பொது சந்தி இல் ஆறு நாழிகை எரிவதாகவும்[।*]
41 அந்தியமபொது சந்தியி லொருசாம மெரிப்பதாகவும்[।*] இம்-
42 மூன்று விளக்கும் நியதிப்படி எரிப்பதாகவும் சங்கிராந்தி-
43 தொறும் ஆடிஅருள நெய் சூலநாழியால் இருநாழி யாட்டுவ-
44 தாகவு மஞ்சட்காப்பரைப்பல மிடுவதாகவும்[|*] திருவமுதரிசி
45 பத்தெட்டுக்குத்தல் சூலநாழியால் ஐஞ்ஞாழியும் நெ-
46 ய்யமுது ஒருபிடியும் கறியமுதுக்கு நெல் நாழிஉம் தயிரமு-
47 து நாழிஉம் அடைக்காயமுது ஐஞ்சும் இலைஅமுது ஒ-
48 ரடுக்கும் இப்படி சந்திராதித்தவற் எங்க ளூ-ஜொபொ-
49 கம் [ப]ங்கினவசமெ இவ்வதிஞ்சிகை [ப]ாண்டன் குடுத்த
50 பொன்னின் பலிசையு மிவன் குடுத்த நிலத்தின் கட-
51 மையும் நாங்களெய் கொண்டு இப்படி செலுத்துவெ-
52 வாமானொ மிவ்வனைவொம் [।*] இது ஊ்மாஹேஶ்வர ரக்ஷை[||*]

## No. 699.

(*A.R. No.* 385 *of* 1903).

ON THE SAME WALL.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] மதிரையும் ஈழமுங் கொ-
2 ண்ட கொப்பரகெசரிபன்மற்கு யாண்டு
3 . . -ஆவது உறையூர்க்கூற்றத்து அல்லூர்
4 அல்லூர் நக்கர் கொயில் பரமெஸ்வர[ர்*]க்கு அல்-
5 லூருடையா [ன]திஞ்சிகை பாண்டன் அல்லூர் ஊரா-
6 ரிடை என்றும் விலைஞ்சறியாப் புன்செ[ய*]த்திட-
7 லை விலைக்குக்கொண்டு வயக்கி மூன்று சனதியும்
8 ஆராதிக்கும் யொகியார்க்கு குடுத்த நிலத்-
9 துக் கெல்லை கிழ்பாற்கெல்லை ஆற்றுக்கெபெ-
10 ான [பெருவழி]க்கு மெக்கும் தென்பாற்கெல்-
11 லை சன்திர[மங்]கலத்து நிர்நிலத்துக்கு வட-
12 [க்*]கும மெல்பாற்[க]லலை சன்திரமங்கலத்து
13 ஒருமாவரைக்குக் கிழக்கும் வடபாற்கெலலை
14 சன்திரமங்க[லத்து] நிர்நிலத்துக்குத் தெற்கு-
15 ம் ஆக இவ்விசை[ச]த்த பெருநான்கெல்லைஉள் ள-
16 கப்பட்ட நிலம் க[ா]லும் இதன்மிது பொய் அல்லூ-
17 ர் ஊராரிடை விலைகொண்டு வயக்கின நிர்நிலத்-
18 துக்கும் தொட்டத்துக்கும இசைத்த எல்லை கிழ்-
19 பாற்கெல்லை ஆற்றுக்கெபொன பெருவழிககு மெ-
20 [க்]கும் தென்[பாற்]கெல்லை கிழக்கொடிய வாய்-
21 க்காலுககு வடககும . . . . . . .
22 வயக்கலுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இத்தெ-
23 வதானத்துக்கெய் தெற்கும் ஆக இவ்விசைத்த பெ-
24 ருநான்கெல்லை[உ]ள் அகப்ப[ட்ட*] நிர்நிலம் மாகாணியும்
25 [தொ]ட்டமும் இதன்மீது பொய் அலலூர்க்கொயிலா
26 னக்கிரகம்பயன இடைவன் காணி காவதி-
27 குடிப் புன்செய்த்திடல் உட்பட வயக்கின [நி]-
28 [ல]மான கள்ளிச்செ[ய்*]யை இவனிடை
29 [வி]லைக்குகொண்[டு இ]றைகாவலுஞ் செய்து-
30 கொண்ட கள்ளிச்செ[ய்*]க் கெ[ல]-
31 லை கிழ்பாற்கெல்[லை புன்செ]இ-
32 னின்றுபொந்த வாய்க்[காலு]க்கு
33 மெக்கும் தென்பாறகெல்லை [காணி]
34 கா[வி]திக்குடித் தெவதானத்[து]க்கும் [வா]-
35 ய்க்காலுக்கும் வடக்கும் மெலபா-
36 ற்கெலலை சி[று]க்களஞ்செரிக்கு கிழ

Allur.

37 க்கும் வடபாற்கெல்லை கிழக்கொடிய
38 வாய்க்காலுக்கு தெற்கு மிவ்விசைத்-
39 த பெருநான்கெல்லைஉ ளகப்பட்ட [நி]-
40 ர்நிலமுமாக இக்கிடக்கைநில மு[ன்]-
41 றும் திருவாராதனைசெய்யும் [யொ]-
42 கியார்க்கு நிவந்தஞ் செய்துகுடுத்-
43 தது [।*] இது பந்மாஹேஸ்வர ரக்ஷை[||*] இது[க்*][கு] [நன்கு] வெண்டுவார் அடி[1]

## No. 700.

(*A.R. No.* 385-*A of* 1903).

ON THE SAME WALL.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] கொராசகெசரிபன்மர-
2 . . . . . . . . . . . . . . . .
3 . . . . . . . . . . ன்று ஸ்ரீமுகம்வர சொழ-
4 . . ங்கன் அம்மை விலை கொண்டுடைய
5 . . மாறு செய்யின் மெலைத் தொட்டம் இ-
6 . . ச்செய்க்கும் இராமன் மறவனும் நா
7 . . . . . . . . . . . . . . . .
8 திருச்செந்து[2]

## No. 701.

(*A.R. No.* 386 *of* 1903).

ON THE SOUTH WALL OF THE CENTRAL SHRINE IN THE CHOLESVARA TEMPLE AT MAHADANAPURAM, KULITTALAI TALUK, TRICHINOPOLY DISTRICT.

Mahadana-puram.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] திருமன்னி விளங்க இருகுவ-
2 டனைய தந்தோளும் வாளும் துணை-
3 என கௌவர் வஞ்சனை கடந்து வயி-
4 ராகரது குஞ்சர[க்*]குழாம் பலவாரி அஞ்சலில்
5 சக்கரகொட்டத்து தாராவ[ஷ*]ரயனைத் திருநிகழ தி[றை]-
6 கொண்டருளி அருக்கநுதைய சதாசைசியமிருக்கும்
7 கமலமனைய நிலமகள்தந்னை முன்னீர் குளித்த
8 வன்னாள் திருமாலாதிக் கெழலாகி எடுத்தந ய-
9 றதும் சவியாவகையில் இனிதெடுத்த தன் குடை நிழலில்
10 இந்புற விருதி திகிரியும் புலியுந் திசைதொறு நடாத்தி
11 புகழுந் தருமமும் புவிதொறு [நடா*]த்தி வீரமுந் தியாகமு மாநமும் க-
12 ருணையும் தந்நுரிமை சுற்றம் பிரியாது தராதல நிகழ ஜ-
13 யமுந் தானும் விற்றிருந்து குலமணிமகுடம் முறைமையிற் சூ-
14 டி தந்கழல் தராதிவர் சூழல செங்கொல் நாவலம் புவி-
15 தொறும் நடாத்திய கொவிராஜகெசரிவந்மரான உடையார்
16 ஸ்ரீராஜேந்த்ரசொழதெவர்[க்*]கு யாண்டு நாலா-
17 வது ||உ செம்பங்குடி கௌஸிகந் ம[துராந்த]கந் வீரபாண்டிய-
18 நாந சொழப்ரஹ்மமஹாராஜந் இவந் ஸ்ரீகயிலாஸமான ஸ்ரீம-
19 துராந்தகஈஸ்வரமுடையார்க்கு அபிமானஜீவவளநாட்டு ஆத-
20 நூர்[நா*]ட்டு ப்ரஹ்மதெயம் ஸ்ரீசொழகுலமாணிக்கசதுர்வேதி-
21 மங்கலத்து பெருங்குறி ஸபையார்பக்கல் நிலம் விலைகொ-
22 ண்டு இறைஇழிச்சுவித்து குடுத்த நிலமாவது[।*] இ[வ்*]வூர்ப் பிடாகை
23 ஸ்ரீகங்கைகொண்டசொழவதிக்கு கிழக்கு ஸ்ரீராஜேந்த்ரசொழவாக்காலு-
24 [க்*][கு] தெற்கு மூந்றுங் கண்ணாற்று நாலாம் சதிரத்து நிலம் நாலுமாவில்
25 . . . . . . . . . .
26 லுக்கு வடக்கு நிலம் இரண்டுமாவும் திடலுக்கு தெ-
27 தற்கு நாவிசர்க்கு அநுபொகம் விட்ட நிலம் அரை-
28 மா அரைக்காணிக் கீழரையும் நீக்கி நின்ற களர் தி-
29 டல் மாகாணி முந்திரிகை [கீழ]ரையும் இங்கெ அஞ்சா-

[1] A few syllables are wanting to complete this record. [2] Much damaged.

30 ஞ் சதுர நில நாலுமாவில் வடக்கடைய வெம்பூர்
31 பொசந் ஸ்ரீமாதவக்ரமவித்தந் உள்ளிட்டார்கு நிங்கு-
32 ம் நிலம் அரைமா அரைக்காணி முந்திரிகை கிழ் அறுமாவ-
33 ரை முந்திரிகையும் திடல்கு தெற்கு நாவிசர்
34 நிங்கும் நிலம் அரைமா அரைக்காணி கிழ் மு[ம்*]மாவரையும் நிர்-
35 நடுவு களர் திடல் நிலம் இருமா வரை அரைக்காணி கிழரையுமா-
36 க தடி இரண்டிநால் சதிரநிரவி நடுவுபட்ட களர்நிலம் நாலுமாவும்
37 இவதி[க்*]கு கிழக்கும் எரிவா[ய்*]க்கு வடக்கு சொழப்ரஹ்மாராயந் வாக்காலுக்கு தெற்கு
தி-
38 ரு[த்*]தாந்தொன்றிமாஹாதெவர் நிலத்துக்கு கிழக்கும் எரிவா[ய்க்*]கு மெற்கு ந-
39 டுவுபட்ட நிலம் ஒருமாவரையும் ஆக நிலங் காலெ அரைக்காலும்
40 விற்றுகுடுத்து கொண்ட விலைப்பொருள் காசு நாலு இ[க்*]காசு நாலும் கொ-
41 ண்டு இன்னிலங் காலெ அரைமாவும் விற்று[க்*]குடுத்தொம் பெருங்குறிஸபை-
42 யொம்[।*]இந்நிலம் சந்த்ராதித்தவற் பதிநாலா ஷரத்திலெ தர(ம்)மெற்று-
43 ம் நிலத்தால் எப்பெற்பட்ட இறையும் இறுதிதாக இறைகாவல்
44 கொண்ட காசு ரூ ஆக காசு பத்து கொண்டு கல்மெல் வெட்டுவித்து குடு-
45 த்தொம் ஸ்ரீமதுராந்தகஈஸ்வரமுடையார்[க்*]கு பெருங்குறிஸபையொம்[।*]
46 திருமங்கலத்து ஸ்வாமி நங்கியர் பணியாலு முட[மொசி] நாராயணக்ரம-
47 வித்தர் பணியாலும் மருதூர் கண்ணி திருமழபா . . . யர் பணியாலும்
48 காஞ்சை க . . ம(க்ர)மவித்தர் பணியாலும் . . க . நற . வெண்-
49 ணயக்ரமவித்தர் பணியாலும் திருப்பெர் விஷ்ணுசக்ரசெகரர் பணியாலும் இ-
50 லூர் மயூரஸ்தந் கொற்றமங்கலமுடையாந் கொதண்டந் பட்டந் எழுத்து[।*] பநாமெ-
51 யஸ்வர ரக்ஷை ||

## No. 702.

(*A.R. No.* 386-*A of* 1903).

ON THE SAME WALL.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ[||*] கொப்பரகெஸரிபந்மரான உடையார் ஸ்ரீராஜெந்த்ரசொழ-
2 தெவர்[க்*]கு யாண்டு அஞ்சாவது [இ]சொழகுலமாணிக்கச்சருப்பெதிமங்க-
3 லத்து பெருங்குறிஸபையொம் ந[ம்*]முர் ஸ்ரீகைலாஸமான ஸ்ரீமதுரா-
4 ந்தகஈஸ்வரமுடையார் ஸ்ரீகொயில் ஆடிஅருளின ஸ்ரீ[இரா]ஜெந்த்ரவிடங்கர்க்-
5 கு . . . . வர் நம்பிராட்டியார் உலகமுழுதுடையார்க்கு . . . . ரதி
6 ணி . . . முதுஉள்ளிட்ட[1]

## No. 703.

(*A.R. No.* 387 *of* 1903).

ON THE WEST WALL OF THE CENTRAL SHRINE IN THE SAME TEMPLE.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] இராசெந்திரசொழதெவற்கு
2 யாண்டு ரு-ஆவது விரசொமீஸ்வரதெவர் வ்ர-
3 யாநிகள் [ஸ்ரீ]ஈநாஈஹாவ்ரயாளி மண்டலிக[மு]ர-
4 ாரி சொமயதண்டநாயக்கனெ[ன்*] இந்த சொழ-
5 குலமாணிக்கசதுர்வெதிமங்கலத்து உடை-
6 யார் மதுராந்தகசொளீஸ்வரமுடெ[ய நா]-
7 யனார் கொயில் செஞலூர் உடையான் ஆரி . .
8 மா துயரந்திர்த்தார் எழுந்தருளுவித்த [ஸப்ர]-
9 ஹ்மண்யப்பிள்ளையாற்கு திருஅமுதுபடிக்கு ெ . . .
10 படி கார்மறுவிலெ யிறையிலி ஆக குடுத்த நிலம்
11 அரைமா [।*] இன்நிலம் அரைமாவுக்கும் யிறை-
12 யிலி மாக்கலம அந்தராயம் உள்ளிட்ட ஆய-
13 ங்களும் தவிந்து சந்த்ராதித்தவரை அமுது-
14 படிக்கு யிறைஇலி ஆக குடுத்து கல்வெட்டி-
15 குடுத்தெந் சொமெய தண்டநாயக்கனெ-
16 ன்||—[இயஈஈ-ஃ][2] ஸந்மாயெஸ்வர ரக்ஷை||

---

[1] The further portion of the inscriptio1 is built in below.

[2] This word looks like மெஈஈஃ

Mahadanapuram.

## No. 704.

(*A.R. No.* 388 *of* 1903).

ON THE SOUTH BASE OF THE CENTRAL SHRINE OF THE ALAVANDISVARA TEMPLE AT PALAIYASANGADAM, SAME TALUK AND DISTRICT.

Palaiyasangadam.

1 பாத்திபஞு வைய்யாசிமீ ௨ கருணகிரினாயக்கர் குமா[ரன்*]
2 சின்னனாயக்கர் ஆளவந்தஈசுரக்கு திருநந்தாவிளக்கு-
3 ப் புண்ணியத்துக்குப் புதுப்பட்டி பாதிகாவல் ௲ கபுரும் கட்ட-
4 ளையிட்டொம[||*] இதுக்கு யாதாமொருவர் அகிதம்பண்ணினவர்
5 கெங்கைக்கரை[யி*]லெ காராம்பசுவைக் கொன்ன தொஷத்திலெ பொ[கவும்] [||*]

## No. 705.

(*A.R. No.* 389 *of* 1903).

ON A STONE OIL-MILL LYING IN A FIELD IN THE SAME VILLAGE.

1 ஸ்ரீவடுகெம்பட்டன் தன்னுடைய செக்கு விசம்பட்டனுக்கு நகரமறிய பெர்பெறு குடுக்க இந்நகரமறிய ஹடாரியா[ர்*]க்கு திருவிளக்கினுக்கு நி[ரொ] ட்டிக்குடுத்த[ா]ன் விசம்(ப்ப)பட்டன் இச்செக்கு [||*]

## No. 706.

(*A.R. No.* 390 *of* 1903).

ON THE EAST WALL OF THE CENTRAL SHRINE IN THE TILLAIYAMMAN TEMPLE AT CHIDAMBARAM, CHIDAMBARAM TALUK, SOUTH ARCOT DISTRICT.

Chidambaram.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ[||*] சகலபுவனச்சக்கரவதிகள் ஸ்ரீகொப்பெருஞ்சி-
2 ங்கதெவர்க்கு யாண்டு ௩-வது மிதுனநாயற்று தியதி இரண்டாநாள் த-
3 னியூர் பெரும்பற்றப்புலியூர் கவுணியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையான்
4 தில்லைவனமுடையபரமெஸ்வரி திருவருளால் இக்கொயில் தெ-
5 வகன்மி கொயி[ற்கண*]ககனுக்கு அன்னியகர்மதிட்டுக் குடுத்தபரிசாவது[*]
6 [பி]டாகை வெள்ள . . . . . க்க . சி[வ]ன் திருச்சிற்றம்பலமுடை-
7 யான் ஸ்ரீமந்தரகதிபதெவநாயகனும் இவ ஊம்பி திருச்சிற்ற-
8 ம்பலமுடையான் செந்தன்பக்கலும் இவ[ர்*]கள் மாதாக்கள் உ-
9 ள்ளிட்டார்பக்கல் கொண்ட பள்ளி[ப]டையில் சுந்தரிசொழவதிக்கு கி-
10 ழ[க்*]கு கண்டராதித்தன்வாய்க்காலுக்கு தெற்கு இர[ண்*]டாங் கண்ணாற்று
11 முதல் சதிரத்து காக்கைபாத்தி என்று பெர்கூவ[ப்*]பட்ட நிலம் விலைஓ-
12 [லைப்படி] நீ . . . க்கு காசு உ௰அஙு பெருங்கவுசியன் இரவி தி-
13 ருக்கழிப்பாலைஉடையானும் இவன் மகன்பக்கலும் உழைச்சானன் கனகசவா[ப]-
14 திபக்கலும் இவன் மாதாவும் யிவன் பிராமணிபக்கலும் கொண்ட முட்டை . . . . சுந்தரிவதிக்கு
15 கிழக்கு வானவன்மாதெவி வாக்காலுக்கு வடக்கு முதற் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து
16 கொண்ட ஓலைப்படி விளைநிலமும் கொல்லையும் உட்பட விலைஓலைப்படி நீஉசு-
17 விறல் காசு சூதுநா-ம் இப்பெருங்கவுசியன் இரவி திருக்கழிப்பாலை உடையானும் இவ-
18 ர் மக்கள்பக்கலும் கொண்ட திருச்சிற்றம்பலவதிக்கு கிழக்கு வாநவன்மாதெவிவாக்-
19 காலுக்கு வடக்கு . . . . . த்து தாமிவியில் கொண்ட ஓலைபபடி நீ உச
20 இப்படி கொண்ட ஓலைப்படி காசு உதூருாம் ஆக நீசஇ பசுசஉ-மும் கொண்
21 ட ஓலைப்படிகளால் காசு ௩௰எதூ இக்காசு முல்பத்தெழாயிரமும் பண்டாரக்காசிலெ
22 யிட்டு என்பெராலெ கொண்டமையில் யின்னிலங்கள் நாச்சிய[ா*]ர்க்கு திருநாம-
23 த்துக்காணியாக திருவுதிட்டு குடுத்தென் தெவகன்மி கொயில்கண்க்க(க)ரும்[1]
24 கவிணியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையானெ[ன்*][।*]இது இவர்கள் சொல்ல எழு-தினெ[ன்*]
25 புலியூருடையானெ[ன்*] எழுத்து[।*]இப்படி சம்மதித்து திரிவுதிட்டு குடுத்தென் கவு-
26 ணியின் திருச்சிற்றம்பலமுடையானென்[।*] இவை என் எழு[த்*]து உ

[1] Read கணக்கனுக்கு.

## No. 707.

(*A.R. No.* 391 *of* 1903).

**ON THE SOUTH WALL OF THE SAME SHRINE.**

**Chidambaram.**

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] சகலபுவனச்சக்ரவத்திகள் ஸ்ரீ கொப்பெருஞ்சிங்கத்தெவர்-
2 க்கு யாண்டு ௩-வது மெஷநாயற்று தியதி இருபத்தஞ்சா நாள்
3 தநியூர் பெரும்பற்றபுலியூர் பெருங்கவிசியன் திருக்கழிப்ப[ா*]லே உ-
4 டையான் இரவியும் இவரையெ முதுகண்ணாக உடைய இவன் பி-
5 ராமணி அம்பலத்தமுது கொத்தலர்குழலியும் இவரையெ முதுகண்-
6 ணாக உடைய இவர் மகன் இரவி திருக்கழிப்பாலேஉடையானும்
7 பெருங்கவிசியன் இரவி திருநட்டமாடியை முதுகண்ணாக உடைய-
8 இவன் பிராமணி அன்னிசாரன் [1] கிழக்கடையநின்றாளும் பெருங்கவு-
9 சியன் இரவி அம்பலத்தமுதை முதுகண்ணாக உடைய இவன் பிராமணி
10 திருக்கழிப்பாலேஉடையான சிவகாமசுந்தரியும் பெருங்கவுசியன் இர-
11 வி சிரிமுலத்தான[மு]டையானும் [உ]ழச்சா[ண*]ன் விஜயகன் பசுபதியை முது-
கண்-
12 ணாக உடைய இவன் மாதா திருக்கழிப்பாலேஉடையான் தத்தையும் இவனெ
13 முதுகண்ணாக உடைய இவன் பிராமணி திருககழிப்பாலேஉடையான் கொண்-
14 டாளுங் இ[வ்*]வனைவொம் கவுசியன் சிவன் திருசிற்றம்பலமுடையானுக்கு நாங்கள் நி-
15 லவிலேபபிரமாணத்திட்டு குடுத்தபரிசாவது[|*] ந[ா*]ங்கள் இவற்கு இன்றையற்று தியதி
16 [ப]தின்மூன்றா நாள் விற்று விலேத்தரவு எழுதிக்குடுத்து யிற்றைநாளால் விலேப்பிரமா-
ணத்-
17 திட்டு எழுதிக்குடுக்கும் எங்கள் நிலம் இவ்வூர் வடபிடாகை மதுராந்தகப்பெரிளமை-
18 நாட்டு முட்டையூறலான பரா[க்]கிரமசொழநல்லூர்பால் ஸ்ரீசுந்தரவதிக்கு கிழக்கும்
ஸ்ரீ-
19 வ[ா*]னவன்மாதெவிவாய்க்காலுக்கு வடக்கு முதற் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து எங்-
கள் ம.-
20 க[ள்] வாச்சியன் நாயன் திருச்சிற்றம்பலமுடையான் உள்ளிட்டார்பெரால் இக்கண்ணா-
21 ற்று யிசசதிரத்தும் பொத்தகம்பெற்ற நிலமாய் நாங்கள் இவ[ர்*]களபக்கல் சிதனத்
தாலு-
22 ம் அபாவத்தாலும் நாங்கள் பெற்றுடையொமாய் நாங்கள் அனுபவித்து விற்றுக்-
23 குடுத்த நிலத்துக்கு எல்லே செவட்டையறுதிக்கு கிழக்கும் கண்ணாற்றுவாக்காலுக்கு தெ-
24 ற்கும் மெற்கும் திருக்காளீசுரமுடைய நாயநார் நிலத்துக்கு தெற்கும் திருச்சிற்றம்பலவ-
25 திக்கு மெற்கும் வானவன்மாதெவிவாய்க்காலுக்கு வடக்கும் ஆக யிசைந்த யின்நான்கெல்-
26 லேயிலும் உட்பட கருத்தளவாக மிகுதிக்குறை வுள்ளடங்க வந்த விளைநிலங்களும் கொ-
27 ல்லேகளும் குளங்களும் வாய்க்கால்களும் உட்பட வகையான நிலை உஇருமருஇ-
28 ன்நிலம் இரண்டரையெ நாலுமா அரைக்காணி முந்திரிகை [சி]ன்னத்தில் நாங்கள்
முன்காளிலெ
29 வாச்சியன் . . . . . [திரு]நட்டப்பெருமா ளுள்ளிட்டாற்கு நாங்கள் விற்றுகுடுத்த
ஒலே-
30 ப்படிகளால் வந்த விளைநிலங்களும் கொல்லேகளும் குளஙகளில் இவர் பாதியும் விற்ற ஒ-
31 லேப்படிகளால் நிக்கின நிலை இசகிவ ... நிக்கி நிக்கி எங்கள் நிலைஉரு கீஇவ-
32 ம் இன்நிலம் இரண்டெ அரைக்காணி கிழரையெ இரண்டு மாவின் சின்னத்தை மிகுதி-
33 க்குறைவு உள்ளடங்க வந்த விளைநிலை வஉப இன்நில[ம்*] எழுமாவும் வடகிழைமுலேயில்
கொ-
34 ல்லேதிருத்தான விளைநிலை . . அரைமாவும் இந்நிலத்துக்கு வடகிழைமுலேயில்
35 நிர்நிலேயும் கிழுயும் இதில் உட்பட்ட குளங்களிலும் மல்லிகைகொல்லேகளும் உள்-
36 ப்பட வந்த நிலம் இரண்டெ அரைக்காணி கிழரையெ இரண்டு மாவின் சின்னத்தை[2] .
. . . . . . .
37 படிசொம்பாதியால் வந்த குளமும் கரையும் துரவில் சொம்பா[தி]யும் உள்பட வந்த நில-
மும் கொல்லேயு . . . . . . . . . . .
38 ன்னத்தையும் விற்று விலேபிரமாணதிட்டு எழுதி[க்*]குடுத்தொம் இந்த கவுணியன்
சிவன் திருச்சிற்றம்பலமுடைய . . . . . . . . . . .
39 . . . . . டய இவர் பிராம . . . . . . . . .

[1] Probably அனந்திசுரன் as in line 10 of No. 392 of 1903. [2] A portion is missing at the ends of lines 36 to 39.

# No. 708.

(*A.R. No.* 392 *of* 1903).

On the south wall of the same shrine.

Chidambaram.

1 யாண்டு ௩-வது ள் மெஷநாயற்று தியதி இருபத்த-
2 ஞ்சா நாள் தனியூர் பெரும்பற்றபுலியூர் பெருங்கவிசி-
3 யன் திருக்கழிப்பாலைஉடையான் இரவியும் இவனெ மு-
4 துகண்ணாக உடைய இவன் [பிர]ாமணி [அம்]-
5 பவத்தமுது கொத்தலாகுழலியும் [இவ]
6 னெ முதுகண்ணாக உடைய இவர் மக [னி]-
7 ரவி திருக்கழிப்பாலைஉடையானும் பெ-
8 பருங்கவுசியன் யிரவி திருநட்ட[மாடியை]
9 முது[க]ண்[ணா]க உடைய இவன் பிராமணி அன-
10 ந்தி[சு]ரன் கிழக்கடையநின்றாளும் பெருங்-
11 [க]விசியன் யிரவி அம்பலத்தமுதை முதுகண்ணா[க]
12 உடைய இவன் பிராமணி திருக்கழிப்ப[ாலை]-
13 உடையாள் சிவகாமசுந்தரியும் பெருங்க . . . . . . . .
14 மூலத்தானமுடையானும் வாச்சிய[ன்*]விநயக . . . . . .
15 முதுகண்ணாக உடைய இவன் மாதா திருக்கழிப் . . . . . .
16 ரன் தத்தையும் இவனெ முதுகண்ணாக உடை . . . . . .
17 ணி திருக்கழிப்பாலைஉடையான் கொண்டா . . . . . . .
18 வொம் கவுணியன் சிவன் திருச்சிற்றம்பலமுடை . . . . . .
19 [க்கு கி]ரெயச்செலவு குடுத்தபரிசாவது [।*]நாங்கள் இவனுக்கு இ-
20 ற்றைநாளால் விற்றுகுடுத்த சாதன ஓலைப்படி நிலம் இரண்-
21 டெ அரைக்காணி கிழரையெ இரண்டுமாவின் [சின்]னமும்
22 விற்றுகுடுத்த ஓலைப்படி காசு ஆறாயிரத் தஞ்ஞூற்றும் கொண்-
23 டொம் கொண்டபரிசாவது [।*]எங்களில் வாச்சியன் விநயகன் ச-
24 பாபதியை முதுகண்ணாக உடைய இவன் பத்தா திருக்கழிப்பாலை-
25 உடையான் தத்தை ஸ்ரீதனம் பெற்றுடைய பிரிதி [நி]ாநிலம் ஒ[ரு]-
26 மாவரை இதில் இவளுடைய நில[ம்*] ஒருமாவுக்கு காசு சூா இக்காக அறு-
27 நூறும் இவன் கைககொண்டும் இவன் மருமகன் கொண்டா-
28 ன் எழுதிஉடைய ஓலைப்படி நிலம் அரைமாவுக்கு கைக்கொண்ட கா-
29 சு [ரூா ஆக] விளைநில[ம் ஒ]ருமாவரைக்கும் கைக்கொண்ட
30 காசு [தொள]ாயிரமும நி[க்*]கி நிக்கி நாங்கள் உடைய விளைநில-
31 மும் கொல்லையும் உ[ள்]ப்பட நிலம் ஒன்றெமுககாலெ நான்கு-
32 மாவரை அரைககா[ணி கி]ழரையெ இரண்டு மாவின் சின்னத்-
33 துக்கு கைக்கொண்ட [காசு] ஐய்யாயிரத் தறுநூறும் உடை-
34 யர் உடையபடி யறக்கொண்டும் ஆக காசு ஆறாயிரத் தஞ்ஞூ-
35 றும் இப்பரி[சி*]நாலெ யறக்கொண்டு [கி]ரெயச்சிலவு குடுத்தொ-
36 ம் இந்த கவுசியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையானுக்கு முற்குறி-
37 த்த இ[வ்*]வனைவொம் [। ।இ[ப்]பரிசு யி[வ்*]வனைவரும் எழுதுக யென்[று]
38 . . யும் விற்று[க*]குடுத்து கொண்[டு*]டாம் . . . . விலைப்[பொ]-
39 ருள் யன்றுடு செல்லு நற்காசு சூகுநா இக்காசு ஆறாயிரத் தஞ்ஞூ-
40 றும் உடையொம் உடையபடி காட்டெற்றி கைச்செல அற-
41 க்கொண்டு முற்குறித்தபடியெ . . . . இந்த நீஉ
42 ரு கீஇசல இந்நிலம் [இரண்]-
43 டெ அரைக்காணி கிழரையெ இரண்டுமா-
44 வின் சின்னத்தையும் இன்நாயற்று தியதி
45 பதின்மூன்றிநால் நிலம் விற்று விலைத்த[ரவு]
46 எழுதிக் குடுத்து இற்றைநாளால் விலை-
47 [ப்]பிரமாணமிட்டு குடுத்தொம் இந்தக-
48 வுசியன் சிவன் திருச்சிற்றம்ப[லமு]டையா-
49 னுக்கு முற்குறித்த [இவ்வனைவொம] [।*] இன்நிலத்-
50 துக்கு இக்காசு ஆறாயிரத் தஞ்ஞூறுமெ வி-
51 லையாவுதாகவும் [।*]பொருள்மாவறுதிப் பெ[ா]-
52 ருட் சிலஓலையும் இதுவெயாவதாகவும் [।*]யி-
53 து அல்லது வெறு பொருமாவறுதிப் பொருட்சிலஓலை க[ா]-
54 ட்டகட[வ]தல்லகாகவும [।*]இன்நிலத்துக்கு ப[ழ]ம்படி பா-

55 யு நிர் பாயவும் வாரிநிர் வாரவும் இறைக்குநிர் யிறைக்க-
56 வும் பெறுவதாகவும் [।*]இன்நிலத்துக்கு யன்னி உடைய[ா]ர்-
57 [நில நின்று இன்நிர் உறப் பாயவும் வாரவும் உடை]-
58 ய வ[ா]க்காலும் யின்நிலத்துக்கு வந்த தடையும் யிடை-
59 யூறுந் தீத்து ஆழ்விப்பதற் கெங்கள் வாழ்வெ யாட்சி யி-
60 றைப்பிணை யாவுதாகவும் [।*]இப்படி சம்மதித்து முற்குறித்த க[ா]-
61 சு ஆறுயிரத் தஞ்ஞூறும் ஆவணக்களரியெ உடையொம்
62 உடையப[டி] கைய்யிலெ யறக்கொண்டு முற்குறித்தப-
63 டிகளால் [வ]ந்த நில [ம்*]இரண்டெ அரைக்காணி கிழரைெ-
64 ய இரண்டுமாவின் சின்னத்தையும் விற்று விலைத்தர[வு]
65 எழுதிக்குடுத்து இற்றைநாளால் விலைப்பிரமாணத்தி[ட்]-
66 டு யெழுதிக்குடுத்தொம் இந்த கவுணியன் சிவன் [திருசசிற்ற]-
67 ம்பலமுடையானுக்கு பெருங்கவிசியன் திருக்கழிப்பா-
68 லை உடையான் இரவியும் இவனெ முதுகண்ணாக உடைய இவ-
69 ன் பிராமணி அம்பலத்தமுது கொத்தலர்குழலியும் இவனெ மு-
70 துகண்ணாக உடைய இவர் மகன் யிரவி திருக்கழிப்பாலைஉ[டை]-
71 யானும் பெருங்கவுசியன் யிரவி திருநட்ட மாடியை முதுக-
72 ண்ணாக உடைய இவர் பிராமணி அனந்திசுரன் கிழக்கடையநி[ன்]-
73 றாளும் பெருங்கவிசியன் யிரவி அம்பலத்தமுதை முதுகண்ணாக
74 உடைய இவன் பிராமணி திருக்கழிபாலைஉடையான் சிவகாம-
75 சுந்தரியும் பெருங்கவுசியன் இரவி ஸ்ரீ மூலத்தானமுடையானு[1]

## No. 709.

(*A.R. No.* 393 *of* 1903).

ON THE NORTH WALL OF THE SAME SHRINE.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ —சகலபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ கொப்பெரு-
2 ஞ்சிங்கதெவர்க்கு யாண்டு ௩-வது மெ[ஷ]நாயற்று தியதி
3 நாவினால் தனியூர் பெரும்பற்றப்புலியூர் [வெ]ள்ளறைக் கவுசிய-
4 ன் திருச்சிற்றம்பலமுடையான்
5 பஞ்சாக்ஷரதெவனும் இவன் மக[ன் ெ]-
6 வள்ளறைக் கவுசியன் சிபஞ்சாக்ஷ[ர]-
7 தெவன் திருச்சிற்றம்பலமுடையா-
8 னும் இவனெ முதுகண்ணாக உடை-
9 ய இவன் பிராமணி திருக்கழிப்பா-
10 லைஉடையான் பிள்ளையாண்டியும் வெ-
11 ள்ளறைக் கவுசியன் திருச்சிற்றம்பல[மு]டையா-
12 ன் ஸ்ரீபஞ்சாக்ஷ[ர*]தெவனை முதுகண்ணாக உ-
13 டைய இவன் மாதா வெள்ளறைக கவிசியன் திரு-
14 ச்சிற்றம்பலமுடையான் பிராமணி செந்தன் தத்-
15 தையும் வெள்ளறை திருச்சிற்றம்பலமுடையான்
16 செந்தனும் இவன் மகன் வெள்ளறை க்கவிசியன்
17 செந்தன் தில்லைநாயகனும் இவனையெ முதுக-
18 ண்ணாக உடைய இவன் பிராமணி சென்னித்தழு-
19 ம்பன் திருக்கழிப்பாலைஉடையாளும் இ[வ*]வனைெ-
20 வாம் கவுணியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையா-
21 னுக்கு நாங்கள் நிலைவிலைப்பிரமாணத்திட்டு
22 குடுத்த பரிசாவது [।]நாங்கள் இவனுக்கு இவா-
23 ட்டை மினநாயற்று தியதி இருபத்தாறிநால் விற்-
24 று விலைத்தரவு எழுதிக்குடுத்து இதுக்கு இற்றைநா-
25 ளால் விலைப்பிரமாணத்திட்டு எழுதிக்குடுக்கும் நி-
26 லம் [।*]இவ்வூர் வடபிடாகை மதுராந்தகப்பெர்இளன-
27 ம[நா]ட்டு பள்ளிபடையான விக்கிரமசொழந[ல்*லூர்] [பா]-
28 ல் சுந்தரசொழவதிக்கு [கி]ழக்கு கண்டராதி[த்*]தவா-
29 . . . [கு] இரண்டாங் கண்ணாற்று முதல்சதிரத்து [காக்]-
30 கைபாத்தி யென்று பெர்கூவ[ப்*]பட்ட நிலத்துக்கு எல்-
31 லை [।*] சுன்தரசொழவதிக்கு கிழக்கும் கண்ணாற்று வாய்-

[1] A few other signatures are wanting to complete this record.

32 க்காலுக்கு தெற்கும் பிடாரி வடவாயில் செல்வி நி[ல]-
33 த்தினுக்கு மெற்கும் வடமெற்கும் பிரமிசுரமுடைய-
34 மாதெவர் நிலத்தினுக்கு வடக்கும் ஆக இசைந்த
35 இன்னான்கெல்லையிலும் உள்ளிட்ட சது[ர]த்துளவா-
36 க மிகுதிக்குறை உள்ளடங்க நத்தமும் குள[மு]ம் உள்ப்ப-
37 ட வந்த நிலவுப இன்நிலம் எழுமாவும் இதில் உள்-
38 பட்ட தெ[ங்கு புளி]உள்ளிட்ட பல்லுருவில் பயன் மரங்களும்கு-
39 ளத்தில் கிழ்நிரும் மெல் நிரும் இறைக்க உடைய துலையும் நிலை-
40 யும் இன்நி[ல*]த்துக்கு முலஓலைபடிகளாலும் பொத்தகபடிகளாலும் உ[ள்]-
41 [ள] உடைமைகளும் உரிமைகளும-
42 [ா]க இத்தனையு மற்று மொழிவின்றி
43 . . தயாய் விற்றுக்கு[டு]த்துக்கொ[ள்]-
44 வதான எம்மிவிசைந்த விலைப்பொ-
45 ருள் ளன்றுடுசெல்லும் நற்காசு
46 உ௰அக இக்காசு இரு[ப]த்தெண்ணாயி-
47 ரமும் உடையொம் உடையபடி ஆ-
48 வணிக்களிரியெ காட்டெற்றிக் கைச்செல வ-
49 றக் கொண்டு விற்று விலைப் பிரமாணத்திட்-
50 டுக் குடுத்தொம் இந்த கவிசியன் சிவன் திருச்சிற்றம்-
51 பலமுடையானுக்கு முற்சொல்லப்பட்ட இ[வ*]வனை-
52 வொம் [।*]இன்நிலத்துக்கு இதுவெ விலை ஆவதாகவு-
53 ம் விலைப்பிரமாணமும் பொருள் மாவறுதிப பொருட்-
54 சிலஓலையும் இதுவெ ஆவுதாகவும் [।*] இதுவலலது ெ-
55 வறு பொருமாவறுதிப் பொருட்சி[ல*] ஓலை காட்ட கட-
56 வதல்லாதுதாகவும்[।*]இன்நிலத்துககு வந்த தடை-
57 யும் இடையூறும் தீர்த்து ஆழ்விப்பதற்க்கு எங்கள்
58 வாழ்வெய் ஆழ்ச்சி இறைப்புணை ஆ(ழ்)வுதாகவும்[।*]
59 இன்[நில]த்துக்கு பழம்படி பாயும் நிர் பாயவும் வா
60 ரும்நிர் வாரவும் இறைக்கும் நிர் இறைக்கவும் பெறு-
61 வதாகவும் இப்படி சம்மதித்து முற்கூறி தந்த காசு இ-
62 ருபத் தெண்ணாயிரமும் உடையொம் உடையபடி அ-
63 றக்கொண்டு முற்குறித்த மிகுதிக் கு[றை*]மை உள்ளடங்-
64 க நிலமும் நத்தமும் குளமும் உள்ளிட்[டு] வந்த நிலம்
65 எழுமாவும் நிலம் முள்ளிட்ட மெ(ர்)னொககின தெங்கு-
66 ம் புளி உள்ளிட்ட பல்லுருவில் பயன்மர[ங்*]களும் கிழ்குளத்-
67 து கிழ்நிரும் மெநிரும் இறைக்க உடைய துலையும் நி-
68 லையும் மற்று முல [1] விலைப்படிகளாலும் பொத்தகப்படி-
69 யாலும் வந்த உடைமைகளும் உரிமைகளு[ம்*] உள்ளி-
70 ட்ட[2] விற்று விலைபிரமாணத்திட்டு குடுத்தொம் இ-
71 ந்த கவுணியன் சிவ[ன்*] திருச்சிற்றம்பலமுடையான் ஸ்ரீ-
72 பஞ்சாக்ஷ[ர*]தெவனு[ம்*] இவன் மகன் வெள்ளறை கவிசியன்
73 ஸ்ரீபஞ்சாக்ஷ[ர*]தெவன் திருச்சிற்றம்பலமுடையானும்
74 இவனையெ மு[து*]கண்ணாக உடைய இவன் பிராம-
75 [ணி] திருக்கழிப்பாலைஉடையான் பிள்ளையாண்டியும் இந்த வெள்ளறை க[வி]சியன் திருச்சிற்-
76 றம்பலமுடையான் ஸ்ரீபஞ்சாக்ஷயதெவனை முதுகண்ணாக உடை[ய*] இவன் மாதா வெள்ளறை-
77 க் கவிசியன் திருச்சிற்றம்பலமுடையான் திருச்சிற்றம்பலமுடையான் பிராமணி செ[ந்*]தந் த[த்*]தை-
78 [த]யும் வெள்ளறை-
79 க் கவிசியன் திருச்சி-
80 ற்றம்பல[முடைய][ான்*]
81 செந்தனும் இவன் ம-
82 கன் வெள்ளறை க-
83 விசியன் செந்த-
84 ன் தில்லைநாயகனும் இ-
85 வனையெ முதுகண்ணாக உ[டை]-

---

[1] Read முல ஓலைப்படிகளாலும் as in line 40.

[2] Read உள்ப்பட.

86 ய இவன் பிராமணி சென்[னித்த]-
87 மூ[ம்பன்] திருக்கழிப்பாலை உடை-
88 யானும் இவ்வனைவோம[।*] இப்பரிசு [இவ்]-
89 வனைவரும் எழுதுக வென்று முன்[னி]-
90 ன்று பணிக்கவும் இவர்களுக்கு இவ்-
91 வெள்ளறைக் கவிசியன் திருச்சிற்ற[ம்]-
92 பலமுடையான் ஸ்ரீபஞ்சாக்ஷிய-
93 நும் இவன் மகனு[ன] ஸ்ரீபஞ்சாக்ஷி-
94 [ரதெ]தவன் திருச்சிற்றம்பலமுடை[யானும்]
95 [வெ]ள்ளறைக் கவிசியன் செந்தன் தி-
96 ல்லைநாயகரும் இ[வ்*]வனைவரும் முது-
97 கண்ணு[க*] இருந்து எழுதுவித்துப் பணிக்-
98 கவும் எழுதினென் கரணத்தான் [பு]-
99 லியூருடையான் பெற்றான் தில்லை-
100 நாயகனன தன்மபிரய(ன்)னென் இ-
101 வை என் எழு[த்*]து என்றும் இப்படி சம்ம-
102 தித்து முது[க*]ணணாய் யிருந்து விற்பி-
103 (பி)த்துக்குடுத்தென் வெள்ளறை கயுசி-
104 யன் திருச்சிற்றம்பலமுடையான்
105 ஸ்ரீபஞசாக்ஷி[ர*]தெவனென் இவை என்-
106 எழுத்து என்றும் இப்படி சம்மதி[த்*]து வி-
107 ற்றும் விற்பித்தும் முதுகண்ணாக யிரு-
108 [ந்]து விற்[பி]த்துக்குடு[த்*]தென் வெள்ளை
109 றக் கவுசியன் திருச்சிற்றம்பலமுடை
110 யானொந் இவை என் எழுத்து என்றும்
111 இப்படி சம்மதித்து
112 முதுகண்ணாயிருந்-
113 து [வி]ற்றும் விற்[பி]-
114 த்துகுடுத்தென் வெ-
115 வள்ளறைக் கவுசி-
116 யன் ஸ்ரீபஞ்சாக்ஷ[ர*]-
117 தெவன் திருச்சிற்ற-
118 [ம்*]பலமுடையானொந் இவை
119 என் [எ]ழுத்தென்றும் இப்படி வி-
120 . . த்தென் பாலாசிரியன்
121 (பாலை) திருக்கழுப்பாலைஉடைய-
122 ான் எழுத்தென்றும் இப்படி சம்மதி-
123 த்து முதுகண்ணு கயிருந்து விற்பித்-
124 துகுடுத்தென் வெள்ளறைக் கவுசிய-
125 ன் திருச்சிற்றம்பலமுடையான் செந்-
126 தன் தில்லைநாயகனொந் [எ]ழுத்தென்-
127 றும் இப்படி அறிவென் வாச்சியன்
128 இளையதிருச்சிற்றம்பலமுடையா-
129 ந்[ஹ*]ட்டனெ என்று [ம்*]இப்படி அறிவெ-
130 ன ஆதிதிரையன் திருக்கழிப்பாலைஉ-
131 டையான் திருநட்டபெருமாளென்றும்
132 இப்படி அறிவென் ஆதிதிரையன் திருந-
133 ட்டபெருமாள நக்கனெ என்றும் இப்ப-
134 டி அறிவென் உழச்சாணன் தெவன் வி-
135 ளுயகனென் எ[ன்*]றும் இப்படி அறிவென்
136 திருக்கடவூ[ர்*] சொமத்தியன் அபிமு-
137 த்திசுரமுடையான் திருக்கிளாஞ்செரி-
138 உடையானென் என்றும் இப்படி அறி-
139 வென் வாச்சியன் திருச்சிற்றம்பலமு-
140 டையான் மாதெவனென் என்றும்
141 இப்படி இசைந்தென் பெரும்பார-
142 தாயன் தெவன் இராசெந்திரசொழ-
143 னென் இவை என் எழுத்தென்றும் [॥*]

Chidambaram.

## No. 710.

(*A.R. No.* 394 *of* 1903).

ON THE NORTH BASE OF THE MANDAPA IN FRONT OF THE SAME SHRINE.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] சகலபுவனச்ச [க்*]கரவத்திக[ள்*] ஸ்ரீகொப்பெருஞ்சிங்கதெவர்க்கு
யாண்டு ரு-ஐஞ்சாவது ஊகார நாயற்று தியதி[1] . . ஞல்
2 தனியூர் பெரும்பற்ற[ப்*]புலியூ[ர்*] மிசினக்குடி கௌசியன் திருக்கிளாஞ்செரிஉடை-
யான் உதாரசெநனை முதுகண்ணாகஉடைய இவர் பிராணி தி-
3 ரிச்சிற்றம்பலமுடையார் நாயகநாச்சியென் இ[வ்*]வூர் கவுணிய[ன்*] சிவ[ன்*] திருச்சிற்-
றம்பலமுடை[யா](ன்)னுக்கு நான் நிலவிலைப்பிரமாண-
4 திட்டு குடுத்தபரிசாவது[।*] இ[ற்*]றைநாளால் விற்று குடு[க்*]கும் என் நிலம் இ[வ்*]வூர்
வடபிடாகை மதுராந்த[கப*]பெர்இளமைநாட்டுப் ப[ள்*]ளிபடையான வி-
5 க்கிரமசொழநல்லூர்பால் ஸ்ரீசுந்தரசொழவதிக்கு கிழக்கு ஸ்ரீகண்டராதித்தன்வாய்க்-
கா(ல்)லுக்கு தெற்கு [க]ண்ணா(ா)ற்று க-சதிரத்து
6 நான் முன்நாளில் ஸ்ரீரயநஃ பெற்றுடைய(ன்)நாயும் விலைகொண்டு உடைய(ன்)-
நாயும் என்னுதாய் நான் அனுபவித்துவருகிற
7 நட்டன்நாலுமா வென்றும் குளகுறை என்று பெர்உடைய நிலம் நாலு மாவுக்கும்
[பி]த்துசெய் என்று பெர்உடைய நி-
8 லத்து தெற்கடைய இ[ந்*]நிலத்தொடெ செர ஒருமாவுக்கும் ஆக நிலம் நாலுமாவுக்கும்
எல்லை தி[ல்*]லைவனமுடைய பரமெ-
9 ஸூ(ஸூ)ரி நிலத்[தி]ர்க்கு கிழகக்கும் மாடவன்[2] . . . . . . . . . . . . ணி ஆவ்-
வாள் நிலத்துக்குத் தெற்கும் கிழக்கும்
10 விசு[3] செந்தன் திருச்சிற்றம்பலமுடையான் நிலத்திணுக்கு தெற்கும் அறுதிக்கு
மெற்கு உடையார் திருச்சிற்றம்பலமுடையா-
11 ர் பலைவரை நிலத்துக்கு மெர்க்கும் வடக்கும் பிடாரி வடவாயில்செல்வி நிலத்தி-
ணுக்கு வடக்கும் ஆக இசைந்த இ[ந்*]நான்கெல்லையு-
12 ம் உள்படக் கருத்தளவாக மிகுதி குறை வுளடங்க வந்த நிலம் கிழைகுளத்தில் நாலுமா-
[வு]க்கும் குழி எட்டும் ஒருமாவுக்கு நில[4]

## No. 711.

(*A.R. No.* 395 *of* 1903).

ON THE SOUTH WALL OF THE SAME MANDAPA.

1 யாண்டு ந-வது ஓஷஹநா-
2 யற்று தியதி பதிமூன்றிஞல் த-
3 னியூர் பெரும்பற்ற[ப்*]புலியூர் பெ-
4 ருங்கவுசியன் திருக்கழிப்பாலை-
5 உடையான் இரவியும் இவனெ
6 முதுகண்ணாகஉடைய இவன் பி-
7 ராமணிகொத்தலர் குழலியும் இ-
8 வனெ முதுகண்ணாகஉடைய இவன்-
9 மகன் யிரவி திருக்கழிப்பாலை-
10 உடையானும் பெருங்கவி-
11 சியன் இரவி திருநட்டமாடி-
12 யும் இவன் தம்பி இரவி அ-
13 ம்பலத்தமுதும் இவர் தம்பி
14 இரவி ஸ்ரீமூலத்தானமுடைய-
15 ானும் இவ்வனைவொம் கவி-
16 சியன் சிவன் திருச்சிற்றம்பல-
17 முடையானுக்கு கி[ை]ரயச்சிலவுதரவு குடுத்தபரிசாவது [।*]நாஙகள் யிவனுக்கு விற்று-
[க்*]குடுத்த இந்த பி-
18 ரமாணப்படியால் வந்த நிலம் இரண்டெ நான்மாவரையின் சின்னமும் விற்று[க்*]-
குடுத்த பிரம-
19 ாணப்படி காசு உதருா இக்காசு இரண்டாயிரத் தஞ்ஞூறும் காட்டெற்றி கைச்செல-
வற வந்-

[1] There is space here for two digits. [2] Space for about fifteen letters is left unengraved. [3] This seems to be a contraction. [4] The continuation is lost.

20 த தெ[ச]த்தெ உ-
21 டைய . . . . . .
22 படி நெராக கை-
23 க்கொண்டு கி[ை]ரய-
24 ச்செலவுதரவு குடு-
25 த்தொம் கவுணியன்
26 சிவன் திருச்சிற்றம்பலமுடை-
27 யானுக்கு இவ்வனைவொம் [।*] இ-
28 வர்கள் பணிக்க எழுதினென் . . .
29 த்தான் புலியூருடையான் பெற்றான் தி-
30 ல்லைக்கூத்தனென் இவை என் எழுத்-
31 து என்றும் இப்படி சம்மதித்து முதுக-
32 ண்ணாயிருந்து கைச்செலவுதரவு குடுப்-
33 பித்துகுடுத்தென் பெருங்கவுசியன் தி-
34 [ரு*]க்கழிப்பாலைஉடையானென் இவை என்
35 [எழுத்து என்றும்] இப்ப[டி] . . . திக்
36 [கி]ரெயச்சிலவுதரவு குடுத்தொ[ம்*] பெரு-
37 ங்கவுசியன் திருநட்டமாடியென் இை-
38 வ என் எழுத்து என்றும் இப்படி அறிவெ-
39 வன்ஆகச் சியன் பொன்னம்பலக்கூத்-
40 தன் தெவனென் [*] இப்படி சம்மதித்து கி-
41 ரையச்சிலவுதரவு குடுத்தென் இப்பெரு-
42 ங்கவுசியன் இரவி சிமுலத்தானமுடையா-
43 னென் இவை என் எழுத்து என்றும் இப்ப-
44 டி அறிவென் உழைச்சாணன் திருச்சிற்றம்-
45 பலமுடையா[ன்*] மாதெவனென்[|*] இப்படி
46 அறிவென் வாச்சியன் விஞயகன் சபா-
47 பதியென் [|*] இப்படி அறிவென் வாச்சி-
48 யன் காரி தெவனென் [।*] இப்படியென்
49 உழைச்சாணன் எடுத்தருளியசிபாத-
50 மென் [||*]

## No. 712.

*(A.R. No.* 396 *of* 1903).

ON THE SAME WALL.

1 யாண்டு ௰௪-வது இ-
2 ராஜதிவாகரப்பெ-
3 ருன்தெருவில் நகரத்தெ-
4 தாம் நியொகம் [।*]தில்லை-
5 வனமுடைய பரமெசுரிக்-
6 குச் சாத்திஅருளு[ம்*] மஞ்சள்காப்-
7 பு நெல்விகாப்பு உள்ளிட்டனவை-
8 [யிற்றுக்]கும் அமுதுசெய்தருளும்
9 அடைக்காயமுது பாக்கு வெற்றிலை உள்-
10 ளிட்டனவையிற்றுக்கும் நாங்கள் உபைய[ம]-
11 ாக வைத்துக்குடுத்த இவர் திருவாசலில் கை-
12 [ட]ய் பரிமாறுங் கூடை ஒன்றுக்கு ஆயமும் [த]-
13 ரகும் கொள்ளாது வெற்றிலை பாக்கு மஞ்ச-
14 [ள]ாக இநெல்வி தான்றி முதிரை வற்கமுள்ளிட்-
15 டன விற்று ஆயத்தா லுள்ளதும் தரகால் உள்-
16 ளதும் இவர் பண்டாரத்தெ இவ்வாட்டை ை-
17 தம்மாதத்து இருபத்துநாலாந் தியதியான
18 நாள் இருநூற்று முப்பத்தெட்டுமுதல் ஒடு-
19 க்குவித்துக் கொள்ளக்கடவதாகவும் [।*]இப்-
20 படி ஸ[ம்*]மதித்தொம் இன்நகரத்தொம் இப்-
21 [ப*]டி செயயுமிடத்து இகடை ஒன்றுக்கு
22 வெண்டுஞ் சரக்குகள் இக்கடையி-
23 ல் இருந்தவன் தான் வெண்டின இடங்க-

Chidambaram.

24 ளிலெ கொண்டு பரிமாறி ஆயத்தால்
25 உள்ளது இவர் பண்டாரத்தெ ஒடுக்க-
26 [கட]வதாக[வும்] இ[ப்*]படி ஸம்மதித்தொம்
27 [இ]னகரத்தொம்[ *] இது நகரப்ப[ணி]-
28 யால் நகரக்கணக்கு நந்திமங்கலமுடை-
29 டயான் எழுத்துவ இப்படிக்கு இவை பு-
30 தூவூர்உடையான் எழுத்துவ இப்படிக்கு
31 இவை [அ]ன[ல்] ஊர்கிழவன் எழுத்து [।*] இப்படிக்-
32 கு இவை பட்டம்உடையான் எழுத்து வ இ-
33 ப்படிக்கு இவை அளகைக்கொன் எழுத்து வ

## No. 713.

*(A.R. No.* 397 *of* 1903).

ON THE SAME WALL.

1 . . சகலபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீகொப்பெருஞ்சிங்கதெவர்க்கு யாண்டு உ-வது [ரிஷப] . . . . .
2 . . . தியதி பதின்மூன்றினால் தனியூர் பெரும்பற்றபுலியூர் பெருங்கவிசயன் திருக்-கழிப்பாலை . . . . .
3 . . ன் இரவியும் இவனெ முதுகண்ணாக உடைய இவன் பிராமணி அம்பலத்தமுது கொத்தலர் . . . .
4 ம் இவனெ முதுகண்ணாக உடைய இவ . . . . ன் இரவி திரு . . .
5 [ப்பாலை]உடையானும் பெருங்கவுசிய[ன்] [இ]ரவி திருநட்டமா . . .
6 வன் தம்பி யிரவி அம்பலத்தமுதும் இவன் தம்பி இரவி ஸ்ரீ [மூலத்த]-
7 ானமுடையானும் இவனைவொம் கவுணியன் சிவன் திருச்சிற்றம்[பல முடை*]-
8 டயானுக்கு நாங்கள் நிலவிலைப் பிரமாணத்திட்டு குடுத்தபரி [சாவது] . .
9 வனுக்கு இன்நாயற்று தியதி எட்டுநால் விற்று விலைத்தரவு
10 குடுத்து [இது]க்கு யிற்றைநாளால் விலைப்பிரமாணத்திட்டு எ . .
11 . கொ . . . நிலம் இவ்வூர் பிடாகை மதுராந்தகப்பெரிளமை . . .
12 [மு]ட்டையூ[ற]வான பராக்கிரமசொழநல்லூர்பால் ஸ்ரீதிருச்சிற்றம்[ப]ல-
13 வதிக்குகிழக்கு வானவன்மாதெவிவாய்க்காலுக்கு வடக்கு முதற் கண்[ணாற்று]
14 முதல்சதிரத்து எங்கள்நிலமாய் கருய்யாய் நிர்நிலையுமாய்
15 பெய்திநூதி எல்லை திருச்சிற்றம்பலவதிக்கு கிழக்கும் எங்கள் மூவி . . . . ,
16 பாத்தகம் பெற்று எங்கள் பக்கல் புறப்பாடாய் அனுபவித்து வருகி[ற கொ]-
17 ல்லை நாச்சியார் நிலத்துக்கு தெற்கும் உடையார் திருச்சிற்றம்பலமுடைய-
18 ார் பலவரவை நிலத்துக்கு மெற்கும் வாச்சியன் குடமுடையான் திரு-
19 நட்ட பெருமான் . . . ' த்தப் பிரமராயன் நிலத்துக்கு கிழக்கும் . . .
20 ம் வானவன்மாதெவி வாக்காலுக்கு வடக்கும் இவ(ர்) இசைந்த யின்[ன]ன்கெ-
21 ல்லைஉள் உள்பட்ட பொத்தகப்படி தரமிலியாய் எங்களுதாய் நா[ங்கள்]
22 விற்று குடுத்த நில[ம்*] இரண்டரையெ அரைமாவின் சின்னத்தில் பெருங்க-
23 வுசியன் தெவன் நிருத்தபிரியன் ஒலைப்படியெ ஆறுமா நிக்கி நிக்கி [நாங்]-
24 கள் விற்ற நிலம் இரண்டெ நான்மாவரையின் சின்னமும் இ[தி]ல் உள்ள
25 குளமும் ஆனைமடுவில் நிர்நிலையு[ம்*] ஆக இத்தனையும் முற்று மொழிவி[ன்றியெ]
26 று தியாக விற்றுகுடுத்து கொள்வதான எம்மிலிசைந்த விலைப்பொருள் [அன்றாடு]
27 நற்காசு இரண்டாயிரத்து நூறும ஆவணக்களியெ காட்டெற்ற[கைச்]-
28 [செல]வற கைய்யிலெ யறக்கொண்டு இன்நிலம் இரண்டெ [நான்மாவ]-
29 ரையும் சின்னமும் கைய்யற விற்று விலைப்பிரமாணத்திட்டு எழுதிக்கு[டுத்]-
30 தென் இந்த கவுணியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையானுக்கு இ[வ*]வனைவெ[ா]ம் இ-
31 க்காசு இரண்டாயிரத் தஞ்[ஞா]றுமெ விலையாவுதா[க*]வும் விலையாவணமும் . . .
32 ாருமாவறுதிப் பொருட்சி[லவெ]வாலையா[வுதா]கவும்[।*] யிதுவல்லது [வெறு]
33 பொருமாவறுதிப் பொருட்சிலவொலை காட்டக்கடவ தல்லாததாகவும்[।*]பழ-
34 ம்படியெ பாயுநிர் பாயவும் வாருநிர் வாரவும் யிறைக்கு நிர் யிறைக்கவும் . . . .
35 பெறுவதாகவு[ம்] [।*]பொத்-
36 தகப்படியாலுள்ள உடைமை-
37 மகளும் உரிமைகளும் மு . .
38 ற்று மொழிவின்றியெ கெ . . . . . .
39 பதாகவும் யிதுக்கு வந்த

40 கடையூறும் யிடையூறும் திர்-
41 த்து ஆழ்விப்பத[ற்*]க்கெ எங்[க]-
42 ள் வாழ்வெ யாட்சி இறைப்பு-
43 ணை ஆவுதாகவும் [।*]இப்படி சம்-
44 மதி[த்*]து மூற்குழித்த காசு இரண்டாயி-
45 ரத்தஞ்நூ[று*]ம் உடையொம் உடையப-
46 டி கைய்யிலெ அறக்கொண்டு[ம்] . . .
47 . . . குழித்தபடியால் வநத நிலம் இரண்-
48 டெ நான்மாவரையின் சின்னத்தை-
49 யும் விற்று [வி]லைப்பிரமாணத்திட்டு எ-
50 ழுதிக்குடுத்தொம் இந்த கவுணியன்
51 சிவன் திருச்சிற்றம்பலமுடையானுக்-
52 கு பெருங்கவுசியன் திருக்கழிப்பாலை[யு]-
53 [டை]யான் யிரவியும் இவனெ முதுகண-
54 ணாக உடைய இவன் பிராமணி அம்பல[த்]-
55 தமுது கொத்தலர்குழலியும் இவனெ மு-
56 துகண்ணாக உடைய இவன் மகன் பெருங்-
57 கவுசியன யிரவி திருக்கழிப் பா[லை*]உடையானு-
58 ம் இவன் தம்பி இரவி திருநட்டமாடியும்
59 இவன் தம்பி யிரவி அம்பலவனும் இவ-
60 ன் தம்பி யிரவி ஸ்ரீமூலத்த[ா*]னமுடையானு-
61 ம் இவ்வனைவொம்[।*] இப்படியால் இவர்க-
62 ள் பணிக்க எழுதினென் கரணத்தான் புலி-
63 யூருடைய[ா*]ன் பெற்றான் தலைக்கூத்தனெ-
64 ன் இவை என் [எ*]ழுத்தென்றும் இப்படி சம்-
65 மதித்து முதுகண்ணாய் யிருந்து விற்பித்தும்
66 விற்றும்குடுத்தென் பெருங்கவுசியன் திரு-
67 க்கழிப்பாலை உடையான் இரவியென் இ-
68 வை என் எழுத்தென்றும் இப்படி சம்-
69 மதி[த்*]து விற்று[க்*]குடுத்தென் இந்த பெருங்க-
70 விசியன் திருநட்டமாடியென் இவை எ-
71 ன் எழுத்து என்றும் . . . .
72 அறிவென் ஆகச்சி[ய]ன் பெ]-
73 ான்னம்பல[க்*] கூத்தன் மா . .—
74 வனென்[।*] இப்படி ச-
75 ம்[ம*]தித்து விற்றுக்குடுத்-
76 தென் பெருங்-
77 கவுசியன் யி[ர]-
78 வி ஸ்ரீமூலத்த[ா]-
79 னமுடையானெ[ன்] [।*]
80 இவை உழச்சாணன் எ-
81 ன் எழுத்து என்றும் இப்-
82 படி அறிவென் வாச்சியன்
83 காரி தெவனெ[ன்*] [।*] இப்படி அ-
84 றிவென் விநாயகன் சபாபதிெ-
85 யன்[।*] இப்படி அறிவென் வாச்-
86 சியன் திருச்சிற்றம்பலமுடை
87 யான் மாதெவனென்[।*] இப்படி
88 அறிவென் எடுத்தருளியஸ்ரீபா-
89 தமென் உ

## No. 714.

(*A.R. No.* 398 *of* 1903).

ON THE NORTH WALL OF THE SAME MANDAPA.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ உ சகலபுவன[சக்கரவர்த்திகள் ஸ்ரீ]கொப்பெருஞ்சிங்கதெவர்க்கு யாண்டு
௫ ௵ ஐஞ்சாவ . . . . . . . .
2 தனியூர் பெரும்பற்றபுலியூர் கவிசியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையா(ன்)னென்
சியன் திருச்சி . . . . . . .

3 [ற]ன் நிலவிலை பிரமாணத்திட்டு குடுத்த பரிசாவது[।*] இவ(ன்)னுக்கு இற்றைநாளால் விற்றுகுடுக்கும் நிலமாவது இ . . . . . . . .
4 பக்கலும் விலைகொண்டு எங்கள் முதலியார் திருமெ . . . . .
5 த்து இவர் அனுபவித்து இவர் அபாவத்து இவர் பிள்ளை . . . .
6 பிள்ளைகளுக்கு சிலபெர் இறுக்கவெண்டுகைய் . . . .
7 முடைய விலையாக விற்று இக்காசை[ச] நாங்கள் . . . . .
8 டல்லாக தரவெணும் என்று இவர்கள் சொல்லுகை . . . . . .
9 இற்றைநாளால் விற்றுகுடுக்கும் நிலம் இவ்வூர் வடபிட . . . . . .
10 ளமைநாட்டு பள்ளிபடையான விக்கிரம . . . . . .
11 [தர]சொழவதிக்கு மெற்கு ஸ்ரீ ராஜராஜவாய்க்காலு . . . .
12 து நான் விற்று[க்*]குடுக்கும் கருப்படி என்று பெர்கூவப் . . . . . .
13 கவல்வி பெருவழிஆன ஆறுற்றுக்கு கிழக்கும் உற இவன் . . . . .
14 ஞானசம்பந்தர் மடப்புறத்துக்கு தெற்கும் சுந்தர . . . . .
15 வாய்க்காலுக்கு வடக்கும் ஆக இ[வ்*]விசைந்த இ[ங்*]நான்கெ . . . . .
16 க மிகுதிகுறை வு[ள்*]ளடங்க வந்த விளை நிலமும் தென்மெலைமூலையில் பூந . . .
17 [யும்] வடகிழைமூலையில் குடிஇருப்பு நத்தமும் மாவும் தெங்கும் புளியும் . . .
18 . . . . . . . மரங்கள்ளும் குளத்தில் இறைக்கும் செங . . குலையும் நிலையும் எத்த மும்
19 மூல ஓலைபடிகளா(ல்)லும் பொத்தகபடியா(ல்)லும் உள்ள உடைமைகளு . . .
20 தனையும் முற்றுமொழிஅன்றி விற்றுகுடுத்த நிலம் ஙூ இ இநிலம் அரை . . .
21 ற்றுகுடுத்து கொள்வதான எம்மிவி(இ)சைந்த விலைப்பொருள் அன்றூடு செல . . .
22 காசு ஐ[ம்]பதிராயிரமும் கொண்டென் கொண்ட பரிசாவது[*]எங்கள் பூ . . .
23 ளை நிச்சயி[த்*]து இறுக்கிற பொன்னுக்கு தி[ல்*]லை நாச்சியார் கொயில் ஸ்ரீபண் . . . . . .
24 ம் நெல்லும் மற்றும் உள்ளிட்ட உடல்களும் விற்று இருந்த தரிசாய் வாங்கிக்குடுத்த . . .
25 ரயெ முன்[று]மாவும் விற்[று] விலைவ்ரமாணத்திட்டுக் குடுத்தென் கவுசியன் திருச்சிற் றம்பல . . . . . -
26 க்கு கவிசிவன் திருச்சிற்றம்பலமுடையா(ன்)னென் இ[ந்*]நிலத்துக்கு இககாசு ஐம்பத்தி . . . .
27 கவும் அதுவெ பொருள் மாவறுதிபொருள் சிலஓலை யாவதாகவும்[।*] இது அல்லது வெறு பொ . . . . . . . . . . .
28 லஓலை காட்டக்கடவதல்லாதாகவும்[।*] இ[ந்*]நிலத்துக்கு பழம்படி பாயுநிர் பாயவு . . . . . . . .
29 இறை[க்]கும் நீர் இறைக்கவும் பெறுவதாகவும் இந்நிலத்துக்கு பொத்தகபடியாலு மு . . . . . . .
30 டைமைகளும் உரிமைகளும் முற்று மெ[ா*]ழிவின்றி பெறுவதாகவும் இ[ந்]நிலத்துக்கு வந் . . . . . . . . . .
31 தித்து ஆழ்விப்பதற்கு என் வாழ்வெ ஆச்சி இறை[ற*]ப்புணையாவது ஆகவும் இ[ப்ப*]டி ச[ம்*]மதித்து . . . . . . . .
32 பத்திராயிரமும் முற்குறித்தபடியெ வாங்கி குடுத்து முறித்த நிலம் அரையெ மு . . . . .
33 று விலைப்வ்ரமாண திட்டு குடுத்தென் கவிசியன் திருச்சிற்றம்பலமுடையான் சிவன் . . . . .
34 ச்சிற்றம்பலமுடைய(ன்)னென்[।*] இப்பரிசு இவர் பணிக்க எழுதிவித்து எழுது- முடி[த்தெ]ன் இ[வ்*]வூர் கரண . . . . . . .
35 ல்லை[க்*]கூத்தன் செங்கமலர்பொற்பாத(ம்)மான தன்மப்பிரிய(ன்)னென் இவை என் எழுத்து[।*] . . . . . .
36 யெ முன்றுமாவும் விற்று[க்*]குடுத்த கா[சு*] ஐம்பத்திராயிரமும் முற்குறித்தபடியெ இப்பொன்னு . . . .
37 கவிசியன் திருச்சிற்றம்பலமுடையான்னென் இவை எழுத்து[।*] இப்படிக்கு . . . . . .
38 இப்படிக்கு இவை திருச்சிற்றம்பலமுடையான் உலகுடையபட்டன் எழுத்து[।*] இப்- படி அ . . . . . . .
39 இப்படி அறிவென் வாச்சியன் சங்கரன் தில்லைநாயகனென் உ இப்படி அறிவென் எடுத்தருளிய சிபாதம் தி[ல்*]லை[க்*]க[ண்ப]னென் உ இ . . . .

# No. 715.

Chidambaram.

(*A.R. No.* 399 *of* 1903).

ON THE SAME WALL.

1 சகலபுவனச்சக்க[ரவ]த்தி-
2 கள் ஸ்ரீகொப்பெ[ருஞ்]சிங்-
3 கதெவர்க்கு யாண்டு ௩-ஆ-
4 வது மெஷநா-
5 யற்று தியதி நா-
6 லா(நலா)நாள்[1]
7 தனியூர் பெ-
8 ரும்பற்றப்பு-
9 லியூர் வெள்-
10 ளறைக் கவுசி-
11 யன் திருச்சிற்றம்ப-
12 லமுடையான் [பஞ்சா]க்ஷ[ர]-
13 தெவனும் . . . . [வெள்ள]-
14 றைக் கவிசியன் ஸ்ரீபஞ்சா-
15 க்ஷ[ர*]தெவன் திருச்சிற்றம்பல-
16 முடையானும் இவனையெ
17 முதுகண்ணாக உடைய இ-
18 வன் பிராமணி திருக்கழிப்-
19 பாலைஉடையான் பிள்ளை-
20 யாண்டியும் வெள்ளறைக்
21 கவிசியன் திருச்[சி]ற்றம்பல-
22 முடையான் ஸ்ரீ பஞ்சாக்ஷ[ர]-
23 தெவனை மு[து*]கண்ணாக உடை-
24 ய வெள்ளறை திருச்சிற்றம்ப-
25 லமுடையான் பிராமணி செ-
26 ந்தன் தத்தையும் வெள்ளறை-
27 ற திருச்சிற்றம்பலமுடை-
28 யான் செந்தனும் இவன் மகன்
29 செந்தன் தில்லைநாயகனு-
30 ம் இவனையெ முதுகண்ணாக
31 உடைய இவன் பிராமணி செ-
32 சன்னித்தழும்ப(ப)ன் திருக்கழி-
33 ப்பாலைஉடையானு[ம்*] இ[வ்*]வனை-
34 வொம் கவணியன் சிவன்
35 திருச்சிற்றம்பல . . . . . . . . . . .
36 த்த நிலம் இவ்வூர் பிடாகை . . . . . . கிரமசொழநல்லூ(ர்)பால் ஸ்ரீ சுந்தர-
சொழவதிக்கு கிழக்கு கண்ட-
37 ராதித்தவாய்க்காலுக்கு ெ . . . . . . . . . ணற்று முதல்சதிரத்து காக்கை-
பாத்தி என்று பெர் கூவப்பட்ட
38 நந்தமும் குளமும் . . . . நிலம் எழுமாவரையும் வி-
39 ற்று[க்குடுத்த] பிரமா . . . . . . . . . .
40 மும் கொண்டெ . . . . காண்ட பரி[ச]ாவது[।*]கவிசியன் திருச்சிற்றம்பல-
41 முடையான் ஸ்ரீ பஞ்சாக்ஷரதெவனும் இவன் மகனும் மாதாவும் ஒபாதி காசு
42 ௧௲௩[௱]௩௰௩ இவன்பக்கல் ஒற்றிக்கும் அசலுக்கும் இவர்கள் வாங்[கி][க்*]குடுத்த
43 பிள்ளையாழ்விப்பிள்ளைக்கும் செல்வ[ப்*]பிள்ளைக்கும் அசலுக்கு குடுத்த காசு
44 ௧௲௩௱௯௰௧ இன்னிலத்துக்கு வரிக்காசுக்கு குடுத்த காசு . . இன்நிலத்துக்கு ஒ-
45 ற்றிக்கு அப்பாண்டானுக்கு குடுத்த காசு ௧௲௨௱ ஈசானதெவனுக்குஒற்றிபடி[*க்]கு குடு-
46 த்த காசு சா௩௰௨ முத்திக்கு நாயகனுக்கு ஒற்றிபடிக்கு குடுத்த காசு சா௩ . . . எருக்-
47 குடைச்சிக்கு ஒற்றிக்கு குடுத்தக் காசு சூா[௩]௰௧ கொண்டானுக்கு ஒற்றிப்படி[க்கு]
48 குடுத்த காசு ௧௲-ம் ஆண்டார் பெரியதெவ[ர்]க்கு ஒற்றிபடிக்கு குடுத்த காசு ௨௱
இந்த ஸ்ரீ-

---

[1] The date intended was probably the 4th day.

49 பஞ்சாக்ஷரதெவர் திருச்சிற்றம்பலமுடையானுக்கு குடுத்த காசு கதசூா பெரியார்க்கு குடு-
50 த்த காசு உாறுய ஆக காசு அகறுா[எய]-ம் நாங்கள் கையில் கொண்ட காசு எாசூயங ஆக க-
51 ாசு ஒன்பதினாயிரத்து முன்[னூ]ற்று முப்பத்துமுன்றும் இப்படி கொண்டும் செந்த-[ன்](த்)
52 தந்த காசு கூசூ ஙாஙய-க்கு கொண்டபடி இன்நிலத்துக்கு ஒற்றிக்கு திருநானசம்பந்த-னுக்கு குடுத்த
53 காசு ஙா திருச்சிற்றம்பலமுடையானுக்கு குடுத்த காசு உா வெள்ளறைக் கவுசியன் திருச்சிற்றம்-
54 பலமுடையான் செந்தன்பக்கல் இவன் விலைகொண்ட பத்துச் செய் நிலம் இரண்டு மாவு[ம்]
55 விலைகொண்டு இவனுக்கு குடுத்த காசு ய ஆண்டார் வாய்மதெவர்க்கு இன்நிலத்தில் ஒற்றி-
56 க்குக் குடுத்த காசு ருதுறுா இவன் மக[ள்] இ[ள]மைநாச்சிக்கு குடுத்த காசு உா என் கையில் கொண்ட
57 காசு கசூாசுயக ஆக காசு எசூஙாசுயகூ இவன் பின்பு தன் கைய்யில் கொண்ட காசு கசூகூாசுயரு ஆ-
58 க காசு கூசூங(ய)ாஙயசு ம் இந்த வெள்ளறை திருச்சிற்றம்பலமுடையான் செந்தனும் இவன் மகன்
59 தில்லைநாயகனும் காசு கூசூஙாஙயங-க்கு கொண்டபடி இவனுக்கு அசலுக்கு வைத்த பிள்ளை-
60 யாழ்விப்பிள்ளைக்கும் செல்லப்பிள்ளைக்கும் குடுத்த காசு உசூளாஙயஅ இன்நிலத்துக்கு வரிக்காசு-
61 க்கு குடுத்த காசு ாய-ம் அமண்ணுசமுத்தானுக்கு குடுத்த காசு ாறுய இன்நிலத்து ஒற்றிக்கு ஆளுடையானு-
62 க்கு குடுத்த காசு ஙா நங்கைச்சிக்கு ஒற்றிக்கு குடுத்த காசு றுா திருக்கிளஞ்செடிஉடை-யானுக்கு ஒ-
63 ற்றிக்கு குடுத்த காசு ா எருக்குஉடைச்சிக்கு ஒற்றிக்கு குடுத்த காசு கதுறுாஅய இன்-நிலத்துக்கு ஒற்றி-
64 க்கு கொண்டானுக்கு காசு த திருவாரக . . . . . . . .
65 யார்க்கு ஒற்றி குடுத்தகாசு ாறுய ஆக காசு [அ] சூாஙயக கைய்யில் கொண்ட காசு கதுஉாஉ-
66 ம் ஆக காசு கூதுஙாஙயங ஆக ஸ்ரீபண்டாரத்து வாங்கி தில்லைவனமுடைய பரமெஸ்வரி ப-
67 ண்டாரத்து வாங்கி இப்படி குடுப்பித்து [கிர]யைச்செலவு குடுத்தொம் இக்காசு இருபத்தெ-
68 ண்ணுயிரமும் இப்படி குடுத்தொம் சியன் திருச்சிற்றம்பலமுடையானுக்கு இ[வ்*]வனை-வொ-
69 ம்[।*] இப்பரிசு இ[வ்*]வனைவரும[ா*]க வென பணிக்க எழுதினெ[ன்*]இவ்வூர் கணக்கன் புலியூருடையான் பெற்று-
70 ன் தி[ல்*]லைநாயகநான தன்மபிரியநென் இ[வை] என் எழுத்து என்றும் இப்படி சம்ம-தித்து இக்கிரெ-
71 யச்செலவு குடுத்தென் திருச்சிற்றம்பலமுடையான் ஸ்ரீபஞ்சாக்கி[ர*]தெவன் எழுத்தென்றும் இப்படி
72 . . . சம்மதி[த்*]து
73 . . . . ச் செலவுதர
74 . . . . ஸ்ரீபஞ்சாழ்ச-
75 . . . . . னெழுத் தெ-
76 . . . . திருக்கழிப்ப-
77 . . . . யிசைந்-
78 . . . . . சிற்றம்பலமு-
79 . . . . . என் எழுத்தெ-
80 . . . . . . யிருந்து கி-
81 . . . . . ள்ளறை கவுசி-
82 . . . . இப்படி சம்ம-
83 . . . . . யிக்கிரெயச்
84 . . . . . க் கவுசியன் தி-

85 . . . . . னென் எழுத்-
86 . . . . . ரும் மராதார-
87 . . . . . ன் இவை என்[1]

## No. 716.

(*A.R. No.* 400 *of* 1903).

ON THE SOUTH AND EAST WALLS OF THE BHAIRAVA SHRINE IN THE SAME TEMPLE.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] ஸகலபுவனசக்ரவத்திகள் ஸ்ரீகொப்பெருஞ்சிங்கதெவற்கு யாண்டு
பதி[னொ]ரு[வது]
2 சொழகொன் ஓலை[।*]தில்லைவ[ன]முடையபரமெஸ்வர கொயில் தானத்தார் கண்டு விடு
தந்ததாவ-
3 து[।*]இக்கொயில் பூஜிக்கு நம்பியார்க்குப் பூஜெப்பெற்றுங்கும் [நை]மச்சருவுக்கும்[இ]ள-
மூளைத்தாளைக்கும [தி]-
4 ருப்பால்ப்பொனகத்துக்கும் ஆழ-
5 மான தினிமா . . மைக்கு . . [த]ரமெற நி-
6 . . . ல்ல . . ண்டு வட . . க்கு இக்கெ-
7 [காயிலி]லெ கல்வெட்டுவதாக வெணுமென்றும்
8 சொல்லிவரக்காட்டினூர் இந்த வெளூர்கிழவர்
9 கூ[த்தா]ழ்வாரான தனியாழிகுடைக்குத் தரமெறநின்றான்பல்லவரயர் கவுணி[யன்]
10 சிவன் திருச்சிற்றம்பலமுடையான்பெரில் அன்னியநாமத்து விலைகொண்டு [வி]ட்ட
11 . . . . . க்கு நாளொன்றுக்கு நெல்லு பதக்குக்குச் சருவரிசி இருநாழிக்கும் இள-
12 மூளைத்தாளைக்கு நெல்லுக் குறுணிக்கும் மிதுனிக்குடி நட்டன் திருந[ட்]டப்பெருமாள்-
பக்கல் காசு பதினாயிர-
13 த்துக்கு பத்தாவது துலாநாயற்றுத் தியதி எழுநால் விலைகொண்ட பெரும்பற்றப்புலியூர்
வடபிடாகை
14 மதுராந்தகப்பெரிளமைநாட்டு முட்டைஊறலான பராக்ரமசொழநல்லூரில் ஸ்ரீசுந்தர-
சொழவதிக[கு]
15 கிழக்கு வானவன்மாதெவிவாய்க்காலுக்கு வடக்கு முதல்க் கண்ணாற்று மூன்றாஞ் சதி-
ரத்தும் இரண்டாங் கண்ணா-
16 ற்று மூன்றாஞ் சதிரத்தும் சாலியமென்று பெர் கூவப்பட்ட நிலத்தினுக்கு எல்லை உடை-
யார் திருச்சிற்றம்ப-
17 லமுடையாா பலவரவை குணமெய்நங்கையார் நிலத்தினுக்கு கிழக்கும் இந்த தில்லைவன-
முடைய பரமெ-
18 ஃஸ்ரீ திருநாமத்துக்காணி நிலத்துக்கு தெற்கும் செவ்வட்டைஅறுதிக்கு மெற்கும்
திருவதிகைமடப்-
19 புறத்துக்கு வடக்கும் நடுவுபட்ட கருத்தளவாக மிகுதிக்குறை வுள்ளடங்[க] வந்த விளை-
நிலம் அரையெ அரைமா-
20 க்காணிச் சின்னமும் இன்னமும் இவ்வூர் கிடாரங்கொண்டசொழ . . . . . . .
கார[ட்ட]ஞ்செரியான செ-
21 ராழநல்லூர்ப்பாலின் சுந்தரசொழவதிக்குக் கிழக்கு இரா[ச*]ரா[ச*]ன்வாய்க்காலுக்கு
வடக்கு ஆறுங் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து குடிஇ-
22 ருப்பு நிலத்தினுக்கு எல்லை செவ்வட்டைஅறுதிக்குக் கிழக்கும் வானவன்மாதெவிவாய்க-
காலுக்குத் தெற்கும் வார்க்கியன் திருச்சிற்றம்பலமுடையான் தி-
23 ருநட்டப்பெருமாளான சிவானநந்தப்பிரமராயர் நிலத்தினுக்குடைய வா[க்]காலுக்கு
மெற்கும் பெரதியாதார் நிலத்துக்கு வடக்கும் நடு[வு]பட்ட கரு-
24 த்தளவாக [மிகுதி][க்*]குறைமை உள்ளடங்க வந்[த கொ]ல்லையுங் குளமும் உள்பபட்ட
நிலம் கால் இதில நிலங்கலந்தபடி மூன்றுகூறிட்ட ஒருகூற்றுல் நிலம் ஒரு-
25 மா வரையெ அரைக்காணிச் சின்னமும் ஆக இரண்டு கடைப்பாட்டாலும் கொல்லையும்
குளமும் விளைநிலமும் உள்பட வந்த நிலம் அரையெ இ-
26 ரண்டுமாக் காணி[ச்] சின்னமும் இன்னமு[ம்தி]ருப்பால்ப்பொனகத்துக்கு எழாவது
ஐஷஹநாயற்றுத தியதி பத்திலால் விலைகொண்டு விட்ட

[1] Further portion containing some signatures is lost.

27 மிதுனிக்குடி கவிசியன் நக்கன் சங்கரனே முதுகண்ணுக உடைய இவர் மாதா மிதுனிக்குடி[டி*]க் கவிசியன் இளையதிருச்சிற்றம்பலமுடையா-

28 ன் நக்கனை கிடாரங்கொண்டசொழப் பிரம்மராயர் வஜ்ராஹணி முத்தாள் திருச்சிற்றம்பலமுடையாள் திருச்சிற்றம்பலமுடையா[ள்] ப[க்]கல் . . . பணி-

29 . . . . . . . . . . .

30 [ண்]டசொழப்பெரிளமைநாட்டு [நடுவின்க்]கரையான ஜனநாதநல்லூரில்பால் தில்லை- . . . கவதிக்[கு]

31 கிழக்கு சொழகுலசுந்தரிவாய்க்காலுக்குத் தெற்கு மூன்ருங் கண்ணுற்று இரண்டாஞ் சதிரத்தும் மூன்ருஞ் சதிரத்தும்

32 இடைஎன்று பெர்கூவப்பட்ட நிலத்துக்கு எல்லே உமைச்சாணன் எடுத்தருளியஸ்ரீபாதம் திருச்சிற்றம்பலமுடையான் . . [வ]-

33 கூத்தன் . . . க்கி நிலத்தில் . . . . .

34 க்கும் கிழ்மா . . [வ]ாய்க்காலுக்கு தெற்கும் சன-

35 னடைக்கு [மெற்]கும் வாச்சியன் [தி]ருச்சிற்றம்பலமு[டை]-

36 யான் பாண்[டிய]னை அருமொழிவஜ்ரஹாராயர் நி[ல]-

37 லுக்கு வடக்கும் [நடுவு]பட்ட நூற்றிரு[ப]த்தெ[ட்டு]க் குழி கொண்-

38 [ட] தொருமாவாக அளந்துகொ[ள்*]ள வந்த நிலம் ஒன்றெ இரண்டுமா இதில்

39 [விக்]கிரமசொழன் தெங்குதிரு[வி][தியி]ல் வடபக்கத்து செங்கனிவாயன் திருநந்தவனத்துஉள்ளு எ . -

40 [ந்த]ருளிஇருக்கும் திருஞானசம்பந்த விநாயகப்பிள்ளையார் பண்டார உட விட்டும் இப்பிள்ளையார்

41 கொயில் திருமாளிகைக்குள்ளு நிற்கும் தெங்குகள் செங்கனிவாயன்திருநந்தவனத்துக்கு வடபக்-

42 கம் பிள்ளை செங்கனிவாயரான சொழகொனுர் தங் காசிட்டு கொண்டு இப்பிள்ளையார்க்கு குடுத்த

43 காசும் இட்டு திருநாமத்துக்காணியாக நிலங் கலந்தவாற்ருல் இப்பிள்ளையார்க்கு குடுத்த

44 து . . காசொபாதி நிலம் அரையெ ஒருமாவும் நிக்கி இந்த தில்லைவனமுடைய பரமெஸ்வரி திரு-

45 வா[ப]ரணம் அறவிட்டுக் கொண்ட காசு ஆருயிரத்திஞல் காசொபாதி நிலம் நான்மா வரைக்காணி

46 முந்திரிகைக் கிழரை நிக்கி இவர் திருப்பால்ப்பொனகத்துக்கு காசு எண்ணுயிரத்துக்குக் கொண்-

47 டு விட்ட நிலம் ஆறுமாக் காணி கிழரையும் ஆக காசு பதினெண்ணுயிரத்துக்குக் கொண்டுவிட்ட

48 நிலம் முக்காலெ மும்மா வரையின் கிழரையின் சின்னத்துக்கும் [க]ல்வெட்டக்கடவதாகச் சொன்டு-

49 னும்[।*] இப்படி செய்யப்பண்ணுவதெ[।*] இவை சொழகொன் எழு[த்]து என்றும் இவை வங்கராய . . ா-

50 க்கமுடையான் எழுத்து என்று இ[ப்படி] கல் வெட்டியதிவை

## No. 717.

(*A.R. No.* 401 *of* 1903).

ON THE NORTH WALL OF THE SAME SHRINE.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ சகலபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீ கொப்பெருஞ்சிங்கதெவர்க்கு யாண்டு

2 அ-வது கற்கடஞயற்று தியதி பத்திஞல் தனியூர் பெரும்பற்றப்புலியூர் வடபிடாகை மதுராந்-

3 தகப்பெரிளமைநாட்டுப் பள்ளி[ப்*]படையான விக்கிரமசொ[ழ]நல்லூரில் விக்கிரமசொ[ழ*]ன் தெ-

4 தங்குதிருவிதியில் தென்பக்கத்து எழுந்தருளிஇருந்து பூஜை[ச] கொண்டருளுகிற நாயனுர் வாரா-

5 ணவாசிமாதெவர் கொயில் ஆதிசண்டெஸ்வரதெவர் திருவ[ரு]ளால் இக்கொயில் ஸ்ரீமாஹெ-

6 ஹார[க்*]கண்காணிசெய்வார்களும் தெவர்கன்மி கொயில்க்க[ண]க்கரும் இ[வ்*]வனை-வொம் பிள்- Chidambaram
7 ளை அரசூருடையார் பெருமாள்ப்பிள்ளையான சொழகொ[னு]க்கு நாங்கள் விலைப்பிர-மாண-
8 த் திட்டுக் குடுத்தபரிசாவது[।*] விக்கிரமசொழன் தெங்குதிருவி[தியி]ல் தென்பக்கத்து எழுந்தருளிவி-
9 க்கிற பிடாரியார்க்கு ஸ்ரீ கொயிலும் திருமுற்றமுமாக விற்றுக்குடுத்த நிலம் விக்கிரம சொழநல்-
10 [லூ]ர்பால் ஸ்ரீ சுந்தரசொழவதிக்கு மெற்க்கு கண்டராதித்தவாய்க்காலுக்கு தெற்கு நா-லாங் கண்ணாற்று முன்-
11 [றுஞ்](ச)சதிரத்து விற்றுக்குடுக்கும் ஸ்ரீகொயிலும் திருமுற்றமுமான நிலத்துக் கெல்-லை இன்னாயனார் திருநாமத்-
12 [து]க்காணியான நிலத்துக்கு கிழக்கு விக்கிரமசொழன் தெங்குதிருவிதிக்கு தெற்குப்பட்ட அம்பலனாதன்வாய்க்-
13 கால்செவ்வையாய் தெங்கு வைத்த திருவிதிக்குத் தெற்கும் இந்த வாரணவாசிநாயனார் மெலை
14 த்திருமடைவிளாகத்து[ம்] வாய்நிளத்துக்கு மெற்க்கும் இன்னாயனார் திருநாமத்துக்காணி-யான
15 நிலத்துக்கு வடக்கும் ஆக இசைந்த இன்னான்கெல்லையிலும் உட்ப்பட்ட வந்த நிலங் குழி ஐம்பதினால்
16 நிலங் காணி அரைக்காணிக் கிழ்ழக்காலுக்கு விலைப்படி காசு ஆயிரம் [।*] இவ்விலை கல்-வெட்டித்து ட [1]

## No. 718.

(*A.R. No.* 402 *of* 1903).

ON THE WEST WALL OF THE CENTRAL SHRINE IN THE ABHIRAMESVARA TEMPLE AT TIRUVAMATTUR, VILLUPURAM TALUK, SOUTH ARCOT DISTRICT. Tiruvamattur.

1 இத்திருவாமாத்தூருடைய வாரஷோஜிகளுக்கு ஸ்ரீராஜராஜதெவர்க்கு யாண்டு உ௰ரு . . . . . . . .
2 ஷார் வழாபாரி வண்ணக்கன் மலையன் கற்றளி வைத்த தி[ருநொந்தா]விளக்கு இதனு-க்கு . . . , இவூர் ஶிவப்ராஹ்மண . . . .
3 ப்ராஹ்மசெட்டி ப்ராஹ்மணி திருவெண்காட்டுசானிபக்கல் விலைகொண்டு வைத்த நிலம் இவூர் செங்கழு . . . . . .
4 ற முக்காலெஅரைக்காலும் காஞ்சிளத்ததில் காலெஅரைக்காலும் ஆக [வெவி]கவ-ம் பொன் கழ . . .
5 வ லெரிக்க[க்*]கடவார் திருவுண்ணாழிகைஉடைய ஶிவப்ரா [2] . . .

## No. 719.

(*A.R. No.* 403 *of* 1903).

ON THE SAME WALL.

1 கொப்பரகெசரி[ப*]ன்மற்[கு*] யாண்டு மூன்றாவது அ-
2 ருவாநாட்டு மிய்வழி வாவலூர்நாட்டு தெவதா-
3 னம் திருவாமாத்தூர் உடையப் பெரு-
4 மானடிகளுக்கு அழிவாளன் கெணி ஆகி-
5 ய செமபின் கட்டிமானடிகள் வைத்-
6 த(த) நந்தாவிளக்கு இரண்டு இவ்விரண்டு-
7 க்கும் வைத்த பொன் ஊற்கற்செம்மை இ-
8 ருபதின் கழஞ்சு இவ்விருபதின் கழ-
9 [ஞ்சு*] பொன்னுங் கொண்டு நிசதம் உரிய

1 The words கல்வெட்டித்து appear to have been attempted to be erased.

2 The record is damaged after this.

